16th August 1960]

SRI N. R. THIAGARAJAN: ஒவ்வொரு கிராமத்தையும் பிரதான ரோடுடன் இணைக்க வேண்டுமென்ற கொள்கைப் பிரகாரம் செய்து வருகிற காலத்தில், 30 கிராமங்களை இணைக்கும் வகையில் 8½ மைல் நீளத்தில் ரோடு போடப்படும். எட்டு ஆண்டு காலமாக மெட்டல் போடப்படாமல் இருக்கிறது. அதைச் சீக்கிரம் முடிக்கும்படி டிஸ்ட்ரிக்ட் போர்டுக்கு உத்தர விடப்படுமா அல்லது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தி லாவது சேர்த்துக் கொள்ளப்படுமா? 9–00 a.m.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: இப்போது அங்கே ரோடு போடப்பட்டிருப்பது டிஸ்ட்ரிக்ட் போர்டு வழி யாகத்தான். கூடுதலான வேலைகள் செய்ய டிஸ்ட்ரிக்ட் போர் டிடம் "நிதி" இல்லாத காரணத்தால் அந்த வேலை இப்போது செய்யப்படாமல் இருக்கிறது. பிரதம எஞ்சினீயரைக் கேட்டதில் இப்போது அந்த ரோடு உபயோகிக்கும் நிலையில் இருக்கிறது என்று சொல்லியிருக்கிறார்.

SRI N. R. THIAGARAJAN: மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலாவது இதைச் சேர்த்துக்கொள்ள ஏற்பாடு செய் வார்களா? 10 லட்சம் ரூபாய் சென்ற பட்ஜட் காலத்தில் நன்கொடை கொடுத்ததிலிருந்து இந்த ரோடைப் போடும்படி சர்க்கார் உத்தரவிடுவார்களா?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இதைச் சேர்த்துக்கொள்ளும் நிலைமை இருந்தால் பரிசீலனை செய்து சேர்த்துக்கொள்ள சிபாரிசு செய்யலாம்.

### *Elementary schools*

*206 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 300 ஜனத்தொகைக்கு மேற்பட்ட எல்லா கிராமங் களிலும், 1960-ம் ஆண்டு இறுதிக்குள் ஆரம்பப் பாடசாலை களைத் திறக்க உத்தேசமுண்டா?

(ஆ) இல்லை என்றால் காரணம் என்ன?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) Only 72 such villages are now schoolless. The question of opening schools in these villages also is under consideration.

(*b*) Does not arise.

SRI S. M. ANNAMALAI: அந்த 72 கிராமங்களுக்கு மேற்பட்டும் சில கிராமங்களில் பள்ளிகள் தேவை என்று மகஜர் வந்திருக்கிறதா? ஒரு கிராமத்திலிருந்து ஒரு மைல் தூரத்திற் குள்ளாகப் பள்ளிக்கூடம் இருந்தால் அங்கு பள்ளிகளுக்கு அனுமதிக்கப்படுவதில்லை. நடுவில் ஏரிகள், ஆறுகள் உள்ள பகுதிகளிலாவது பள்ளிக்கூடங்கள் வைக்க அனுமதிக்கப் படுமா?

[16th August 1960

THE HON. SRI C. SUBRAMANIAM: இப்போது சர்க்கார் கொள்கை என்னவென்ருல் ஒரு மைலுக்கு உள்ளாகக் குழந்தைகள் நடந்து போகும் இடங்களில் பள்ளிகள் அமைப்பது என்பது. நடுவில் ஆறுகள், குளங்கள் ஆகியவற்ருல் போக்கு வரத்துக்குத் தடை இருப்பதாக அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டு வந்தால் அந்தப் பகுதியில் தனியாக ஒரு பள்ளிக் கூடம் ஏற்படுத்தலாம்.

SRI M. S. SELVARAJAN: ஆரம்பப் பள்ளிகள் திறக்கத் தேவையான தூரம் போதுமான குழந்தைகள் இருக்குமிடங் களில் 300 ஜனத்தொகை இருந்தால்தான் ஒரு பள்ளியைத் திறக்கலாம் என்று விதி செய்யாமல், 300-ஐ விடக் குறைவாக ஜனத்தொகை உள்ள இடங்களிலும் ஸ்பெஷலாகப் பள்ளி களைத் திறக்க முன் வருவார்களா?

THE HON. SRI C. SUBRAMANIAM: சிறு சிறு பள்ளிக்கூடங் களாக, ஒரு வாத்தியார், இரண்டு வாத்தியார்களைக் கொண்டு நடக்கக் கூடிய பள்ளிகள் சரிவர நடப்பதில்லை. நான்கு அல்லது ஐந்து ஆசிரியர்களாவது இருந்தால்தான் பள்ளிக் கூடங்கள் நன்ருக நடைபெற வாய்ப்பு இருக்கிறது. ஆகவேதான் இம்முறை கையாளப்படுகிறது.

SRI R. KRISHNASAMI NAIDU: இப்போதிருக்கும் திட்டப் படி ஒரு மைலுக்கு உட்பட்ட தூரங்களில் பள்ளிக்கூடங்கள் வைப்பது சாத்தியமில்லை என்று இருப்பதால், ஆறு வயதுக் குழந்தைகள் மகசூல் காலங்களில் கம்பு, சோளம் முதலியவைகள் பயிரிடப்பட்ட கரடுமுரடான வழிகளில் சென்று வரக் கஷ்டப் படுகிருர்கள். ஆகவே, இப்போதிருக்கும் விதியைத் தளர்த்த அரசாங்கம் முன் வருமா?

THE HON. SRI C. SUBRAMANIAM: போக்குவரத்து வசதி கள் சரியாக இல்லாமல் இருக்கும் இடங்களில் இதைத் தளர்த்த இப்போதே இடமிருக்கிறது. குறிப்பிட்ட பகுதிகளைப் பற்றிச் சர்க்காருடைய கவனத்திற்குக் கொண்டு வந்தால் அது பரிசீலிக் கப்படும்.

SRI A. VEDARATHNAM: உயர் ஆரம்பப் பள்ளிகள் எத்தனை மைல் தூரத்திற்கு ஒன்று இருக்க வேண்டுமென்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது? எத்தனை ஆரம்பப் பள்ளிகள் இருந்தால் ஒரு உயர் ஆரம்பப் பள்ளி இருக்க வேண்டும்?

THE HON. SRI C. SUBRAMANIAM: உயர்தர ஆரம்பப் பள்ளிகள் மூன்று மைலுக்கு ஒன்று இருக்க வேண்டும். எத்தனை பள்ளிக்கூடங்கள் வேண்டுமென்ற தகவல் என்னிடத்தில் இல்லை.

SRI M. S. SELVARAJAN: நான் குறிப்பிட்ட தகுதி களுடன் கூடிய பகுதிகளில் குறைந்த பட்சம் "ஃபீடர் ஸ்கூல்" ஆவது திறக்க முன்வருவார்களா?

THE HON. SRI C. SUBRAMANIAM: எந்த இடத்தைப் பற்றிக் குறிப்பிடுகிருர்கள், என்று தெரியவில்லை. புள்ளி விவரங்கள் என்ன என்பதையெல்லாம் தெரிந்து அங்கத்தினர் அரசாங்கத்துக்கு எழுதினுல் அது பற்றி ஆலோசிக்கப்படும்.